*Nam nāṭu*
*Malar 2, itaḻ 49*
*August 10, 1954*

Record no. 1131

# கோவா கவர்னர்-ஜெனரலுக்கு சீட்டு!

REGD. No. M. 6311 PHONE No. 55630

# நம் நாடு

தி.மு.க.தினஇதழ் ஆசிரியர்: அண்ணதுரை

The "Nam Nadu": A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F

| | | | |
|---|---|---|---|
| தனி இதழ்: ஒரு அணு<br>இலங்கையில் 10 சதம் | சென்னை : ஆடிமீ 26உ செவ்வாய்<br>வெளியூர் : ஆடிமீ 27உ புதன் | (10—8—54)<br>(11—8—54) | மலர்: 2<br>இதழ்: 49 |


## இலங்கை தமிழர்களும், வட நாட்டு அகதிகளும்

## சென்னை சிந்திக்கிறது! டெல்லி செலவிடுகிறது!!

### பனியர்க்களுக்கு லட்ச ரூபாய் உதவி

## தமிழர் படும் அவதியும் வடவர் அடையும் லாபமும்!

மேற்கு, கிழக்கு பாகிஸ்தானில் இருந்து வந்த அகதிகளுக்கு கடந்த ஆறு ஆண்டுகளில் டில்லி சர்க்கார் மட்டும் ரூ. 201 கோடிக்குமேல் செலவிட்டிருக்கிறது.

டில்லி சர்க்கார் செலவிட்ட ரூ. 201 கோடி தவிர்த்து, பஞ்சாப், மேற்கு வங்கம், மற்றும் இதர இராஜ்யங்கள் தனியாக அகதிகள் பிரச்சினைக்கு கோடிக்கணக்கில் செலவிட்டிருக்கின்றன என்று தெரிகிறது.

இலங்கையிலிருந்து தாயகம் திரும்புவோரின் புனரமைப்பு வாழ்வு சென்னை சர்க்காரினுடையது என்று டில்லி அமைச்சர் கூறினர்; ஆனல், மத வெறியினுல், தங்கள் வாழ்வைத் தாங்களே பாழ்படுத்திக்கொண்ட அகதிகளுக்கு டில்லி அரசாங்கம் இதுவரை ரூ. 13 கோடி கடன் தந்துள்ளதாம்.

இதன் மூலம் 3 லட்சம் அகதிகள் புனர் வாழ்வு அளிக்கப்பட்டு 60,000 பேருக்குமேல் நிரந்தரமான வேலை தேடிக் கொடுக்கப்பட்டுள்ளது.

அகதிகளுக்கு கடன் தருவதற்கென்று தனியாக 'பாங்கி' போன்ற அமைப்பொன்றை அகதிகள் புனரமைப்பு இலாகா ஏற்படுத்தியுள்ளது. அகதிகளுக்கு நிரந்தரமான புனரமைப்பு ஏற்பாடுகளுக்கு இதன்மூலம் ரூ. 13 கோடி கடன் அளிக்க வசதி செய்யப்பட்டிருக்கிறது. சிறு தொழில்களுக்கு இந்த அமைப்பின் மூலம் கடன் தரப்படுகிறது. ஒரு அகதிக்கு அதிகபட்சம் தொழிற்சாலை ஆரம்பிக்க ஒரு லட்ச ரூபாய் கடன் தர டில்லி ஏற்பாடு செய்திருக்கிறது.

சராசரியாக நபர் ஒருவருக்கு ரூ 7,750 கடன் தரப்பட்டிருக்கிறதாம்!

கடன் ஆறு ஆண்டுகளில் 65,743 விண்ணப்பங்கள் கடன் கேட்டு வந்ததில் இதுவரை 16,724 அகதிகளுக்கு சுமார் 13 கோடி வரையில் கடன் தரப்பட்டிருக்கிறது.

அகதிகளுக்குக் கொடுக்கப்படும் கடனுக்கு இதுவரை விதிக்கப்பட்ட 6 சத வீத வட்டி விகிதம் இப்போது 4½ சத விகிதமாகக் குறைக்கப்பட்டிருக்கிறது.

கடன் மறுக்கப்பட்ட அகதிகளின் விண்ணப்பங்களை மீண்டும் பரிசீலனை செய்ய நான்கு பேர் கொண்ட கமிட்டி ஒன்று நியமிக்கப்பட்டிருக்கிறதாம்.

கடனாக அளிக்கப்பட்ட ரூ 13 கோடியும் கோடியாக 83,620 அகதிகளுக்கும், மறைமுகமாக 2,25,773 அகதிகளுக்கும் உதவி செய்துள்ளதாம்!

திரு-கொச்சி அறப்போர்:

## ஆக. 11 விடுதலை தினம்

சர்வாதிகாரி குஞ்சன் நாடார் அறிக்கை

திருவாங்கூர் தமிழர் அறப்போரில் இதுவரை 919 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர். இவர்களில் இரண்டு பாராளுமன்ற உறுப்பினர்கள், 9 சட்டசபை உறுப்பினர்கள், 2 நகரசபைத் தலைவர்கள், 11 பஞ்சாயத்து போர்டு தலைவர்கள், மற்றும் பலர்

நமது வலிமையை எடுத்துக் காட்டவும், உரிமைகளுக்காக எவ்விதமான தியாகமும் செய்யத் தயாராக உள்ள நமது உறுதியைக் காட்டவும் ஆகஸ்டு 11-ந் தேதியன்று "தமிழ் நாடு விடுதலை தினம்" கொண்டாடப்படும். அன்று பொதுவேலை நிறுத்தம் நடைபெறும். திரு-கொச்சி தமிழ்ப் பகுதிகளில் ஊர்வலங்கள் நடைபெறும். சர்க்கார் மருத்துவ மனைகள் தவிர, மற்ற சர்க்கார் அலுவலகங்கள் முன்பு மறியல் நடைபெறும். நான், இந்த 'விடுதலை தின'த்தின் வெற்றிக்கான ஆதரவை நல்க வேண்டுமென்று, திரு—கொச்சியில் உள்ள எல்லா பொது இயக்கங்களையும், அரசியல் கட்சிகளையும் கேட்டுக் கொள்கிறேன் என்று குஞ்சன் நாடார் அறிவிக்கிறார்.

## தாயகம் திரும்பும் தமிழர்கள்

### தூதுவர் தேசாயை வாபஸ் பெற சட்டசபையில் கோரிக்கை

சென்னை, ஆக. 9—

"இம்மாநில சர்க்கார் கேட்டுக் கொண்டதின் பேரில் இந்திய சர்க்கார் இப்போது இலங்கை இந்தியர் பிரச்சினையில் சென்னையைக் கலந்தாலோசிக்கின்றனர்,"

என்று சென்னை சட்ட சபையில் கேள்வி ஒன்றிற்கு பதில் அளிக்கும் போது நிதி அமைச்சர் கூறினர்.

தற்காலிக வாச பெர்மிட்டுகள் காலவதியாகிய பின்னர் இலங்கையிலிருந்து இந்தியர்கள் இருப்பதாகமாநில சர்க்காருக்கு தகவல் கொடுக்கப்பட்டுள்ளது என்றும், அவர்களை குடியமர்த்தும் பிரச்சினை சர்க்காரின் பரிசீலனையில் இருக்கிறது என்றும் அமைச்சர் மேலும் கூறினர்.

வீட்டு வேலைக்காரர்களும், கடைசிப் பிரிவு ஊழியர்களும் சீக்கிரம் இங்கு அனுப்பிவைக்கப்படலாம்; அதனுல் ஏற்படக் கூடிய நிலைமையைச் சமாளிக்க சர்க்கார் என்ன ஏற்பாடுகள் செய்திருக்கின்றது?'

பதில்:- "அந்த நிலைமை இன்னும் ஏற்படவில்லை; அவ்வித நிலைமை ஏற்பட்டால் அநேகமாக முன்கூட்டியே அது நமக்குத் தெரியவரும்; நாம் எல்லா ஏற்பாடுகளையும் செய்ய முடியும்;"

இலங்கையில் உள்ள இந்திய ஹை கமிஷனர் இந்தியர்களுக்கு அதிக உதவியாக இல்லையென்றும் எனவே அவரை வாபஸ் பெறுமாறு மாநில சர்க்கார் டில்லிக்கு சிபார்சு செய்யவேண்டுமென்றும் உறுப்பினர் ஒருவர் கூறினர்.

"அங்கத்தினரின் யூகம் சரியல்ல," என்று நிதி அமைச்சர் பதில் தந்தார்.

## போலீஸ் அதிகாரி - பொறுப்பேற்கிறர்

## கவர்னர்-ஜெனரலின் அதிகாரங்கள் பறிமுதல்!

### லிஸ்பன் சர்க்கார் நேரடியாக நிர்வாகத்தை ஏற்கிறது!

## அரசியல்சீர்திருத்தம்வழங்க கைடஸ் கூறினராம்!

### கோவா பாங்கியில் மக்கள் முற்றுகை

பஞ்ஜிம், ஆக. 9—

போர்ச்சுகீசிய இந்தியப் பகுதிகளின் கவர்னர்-ஜெனரல் பாலோ பெனர்டு கைடஸ், லிஸ்பன் சர்க்காரால் திருப்பி அழைக்கப்பட்டிருக்கிறர்.

அவருக்குப் பதில் போலீஸ் இன்ஸ்பெக்டர் - ஜெனரலான எப். ஆர். ரோம்பா என்பவர் பொறுப் பேற்குமாறு உத்தரவிடப்பட்டிருக்கிறர் என்று தெரிகிறது.

இந்தியாவுடன், கைடஸ், ஒரு சுமுகமான ஒப்பந்தத்தை அவர் ஆதரிக்கிறர் என்று போர்ச்சுகீசிய சர்க்கார் சந்தேகப்பட்டதாலேயே அவரைத் திருப்பி அழைக்க முடிவு செய்தனர் என்று தெரிகிறது.

லிஸ்பன் சர்க்கார், கவர்னர் – ஜெனரல் கைடசுக்கு உள்ள அதிகாரங்கள் அனைத்தையும் பறிமுதல் செய்து, போர்ச்சுகீசிய இந்தியப் பகுதிகளின் நிர்வாகத்தை நேரடியாக எடுத்துக்கொண்டு விட்டது.

இந்தியப் பகுதிகளில் இப்போது உள்ள அடக்குமுறை நடவடிக்கைகளுக்குப் பதிலாக, அரசியல் சீர்திருத்தங்களை அமுல் செய்ய வேண்டுமென்று போர்ச்சுகீசிய பிரதமர் டாக்டர் சலாசருக்கு, கவர்னர் - ஜெனரல் யோசனை கூறியதாலேயே லிஸ்பன் சர்க்காரின் வெறுப்புக்கு அவர் ஆளானர் என்று தெரிகிறது.

ஆகஸ்டு 15-ந் தேதி யன்று நடைபெறப் போகும் அறப்போரை அடக்க போர்ச்சுகீசிய அதிகாரிகள் எல்லா நடவடிக்கைகளையும் எடுத்து வருகின்றனர் என்று தெரிகிறது.

போர்ச்சுகீசிய இந்தியப் பகுதிகளில் நெருக்கடி முற்றிவருகிறது. சர்க்கார் பாங்கியில், ஏராளமான மக்கள் தங்கள் முதலீடுகளைத் திரும்பப்பெற முயற்சிக்கிறர்கள்.

இந்திய நாணயத்தைக் கேட்ட மக்களை, அவர்களது முதலீடுகளை திருப்பித்தர இயலாது என்று கூறி பாங்கி அதிகாரிகள் எச்சரிக்கின்றனர் என்று தெரிகிறது.

'கோவாவைவிட்டு வெளியேறு,' என்ற அறிவிப்புகள் இந்தியப் பகுதிகள் எங்கும் ஒட்டப்பட்டிருக்கின்றனவாம்!

★

### பார்வையாளரை அனுப்புக!

போர்ச்சுகீசிய இந்தியப் பகுதிகளில் நடுநிலைமைப் பார்வையாளர்களை அனுப்ப வேண்டுமென்று லிஸ்பன் சர்க்கார் இந்திய சர்க்காரைக் கேட்டிருக்கிறது.

இந்தியப் பகுதிகளில் உள்ள மக்கள், தங்கள் பிரதேசங்களில் நுழைந்து, விடுதலைப் போர் நடத்துவோருக்கு உதவுகின்றனர் என்ற தனது குற்றச்சாட்டைமற்றி ஆராயவே பார்வையாளர்களை அனுப்ப வேண்டுமென்று லிஸ்பன் சர்க்கார் கோருகிறதாம்,

இரு சர்க்கார்களுக்கிடையே மனமாச்சரியங்களைப் போக்கவும், மோதுதலைத் தவிர்த்து இரத்தம் சிந்தப்படுவதைத் தடுக்கவும், ஆசியாவில் ஒரு தகராறு பிரதேசம் ஏற்படாது தடுக்கவும்தான் இவ்வாறு கோருவதாக லிஸ்பன் கூறுகிறது

ஆகஸ்டு 10-ந் தேதி மாலை 4 மணிக்குள் தனது பதிலைத் தரவேண்டுமென்று இந்தியா கோரப்பட்டிருக்கிறது.

★

### கோவாவில் 10,000 துருப்புகள்!

பம்பாய், ஆக. 9—

கோவாவில் போர்ச்சுக்கல் அதிகாரிகள் 10,000 துருப்புகளைத் தேக்கி வைத்திருக்கின்றனராம். இவர்களில் 2000 ஐரோப்பியத் துருப்புகள் உள்ளனவாம்.

ஆகஸ்டு 13-ந் தேதியன்று மேலும் 2500 நீக்ரோ துருப்புகள் வந்து சேருமென்று தெரிகிறது.

பிரெஞ்சிந்தியா:

### இரு நாடுகளின் அறிக்கை வெளியாகும்

புதுடில்லி, ஆக. 9—

பிரெஞ்சிந்தியப் பகுதிகளின் எதிர்காலம் பற்றி இந்திய சர்க்கார் இரண்டு நாட்களுக்குள் அறிக்கை ஒன்று வெளியிடும் என்று தெரிகிறது.

இந்திய சர்க்காரும் பாரிஸ் சர்க்காரும், தனித்தனியே அறிக்கை வெளியிடுமென்று தெரிகிறது.

நம் நாடு
தி. மு. க. தினஇதழ் ஆசிரியர்: அண்ணாதுரை

சென்னை 10—8—54 செவ்வாய்

# "விருத்தநாரி பதிவ்ரதா"

ஆச்சாரியார் அரசியல் பேசுகிறார்! காங்கிரசைக் குறித்துப் பேசுகிறார்!!

அன்னை சீதா பிராட்டியாரை அப்பன் கோதண்டராமன் 'விவாகம்' செய்துகொண்ட 'விசேஷம்' பற்றிய ஆனந்தத்திலே மூழ்கிக் கிடந்தவருக்கு அரசியலைப் பற்றிப் பேச அவகாசமும் கிடைத்ததே! கோசலைச் செல்வன் மிதிலைச் செல்வியின் கரம் பற்றிக் கடிமணம் புரிந்துகொண்ட காட்சியைக் கண்டு ரசித்ததால் (மனக்கண்ணால்) மன முழுதும் அதிலேயே இலயித்துப் போயிருந்தவருக்கு, அரசியலைப் பற்றி எண்ணவும் பேசவும் மனம் இடம் தந்ததே! ஆச்சரியம் தான்!!

காகுத்தன் கமலவிழிக் கட்டழகியாம் ஜானகியைக் கண்டு களித்த காட்சியிலே மனதைப் பறிகொடுத்திருந்த மாமேதைக்கு, என்ன காரணத்தாலோ, காங்கிரஸ் கட்சியைப் பற்றிய நினைவு பிறந்தது; பேசிவிட்டார்!!

ஆச்சாரியார், ஏன் அரசியலிலிருந்து விலகினார்? அதைத்தான் அவரும் அவர் அடியார்களும் பன்னிப் பன்னிக் கூறினார்களே! உடல் நலக் குறைவு! உடலிலே தளர்ச்சி! உள்ளத்திலே சோர்வு!! தாங்க முடியாத அரசியல் சுமையை எப்படிப் பாவம், இந்தத் தள்ளாத வயதில் சுமப்பார்! எனவே, விலகினார்!!

நாடு, கை கொட்டிச் சிரித்தது. இந்தக் காரணம் காட்டப்பட்டபோது!!

இப்போது ஆச்சாரியார் அரசியல் பற்றி, குறிப்பாகக் காங்கிரசைப்பற்றிக் கூறியது கேட்டால், நாடு, எள்ளி நகையாடத்தான் செய்யும்!

ஆண்டு ஒன்றுகூட முடியவில்லை, ஆச்சாரியார் 'காங்கிரஸ் சர்க்காரை'த் தலைமை தாங்கி நடத்திய பாரத்தைக் கீழே இறக்கி வைத்து!

'காங்கிரஸ் கட்சிக்குப் பேராபத்து வருகிறது; இச்சமயம் நாம் கைகொடுத்தாக வேண்டும்,' என்ற கடமை உணர்ச்சியால் உந்தப்பட்டு, குற்றாலத்தானிடம் விடைபெற்றுக்கொண்டு, குறுந்தடி தாங்கிக்கொண்டு, ஓட்டம் பெருநடையாய்ச் சென்னை வந்தடைந்து, முதலமைச்சரானார் — ஆண்டார் — விலகினார்!

சென்ற ஆண்டு இதே திங்களில், சென்னையில் காங்கிரஸ் மந்திரி சபை — அதற்கு இவரே தலைவர்!

இப்போது, மாஜி முதலமைச்சர், மாஜி தலைவர், காங்கிரஸ் கட்சி பற்றி என்ன பேசுகிறார் என்று எண்ணுகிறீர்கள்?

**காங்கிரஸ் கட்சி பருத்து விட்டது—அதனால் அது கெட்டுவிட்டது!!**

இப்போது ஆச்சாரியார் காங்கிரஸ் மந்திரி சபையை நடத்திச் செல்லவில்லை; காமராஜர் ஆட்சி செய்கிறார்; இப்போது ஆச்சாரியார், நாட்டுக்குக் கூறுகிறார்—காங்கிரஸ் கெட்டுப்போய்விட்டது—என்று!

எவ்வளவு பண்பு, பாருங்கள்! எத்தனை துணிவு இருந்தால் இப்படிப் பேச முடியும் என்பதையும் எண்ணிப் பாருங்கள்!

சென்ற ஆண்டு, காங்கிரஸ் கட்சி நல்ல கட்சி! ஏன்? இவர் அக்கட்சியின் ஆணையால் முதலமைச்சர்!! இந்த ஆண்டு காங்கிரஸ் கட்சி கெட்டுப்போய்விட்டது! ஏன்? இப்போது காங்கிரஸ் கட்சியின் ஆணை இவருக்கு இல்லை! முதலமைச்சர் பதவி இல்லை!!

எவ்வளவு நெஞ்சழுத்தம் இருந்தால், 'நிஷ்காமகர்மி' என்று அடிவருடிகளால் அர்ச்சிக்கப்படுபவர், இவ்வளவு எளிதாக, பதவி பறிக்கப்பட்டதும், பதவியும் பவிசும் தந்த கட்சி மீது பாயத் தோன்றும்!

தனக்கு வாய்ப்பும் வசதியும், அதிகாரமும் அந்தஸ்தும் தருகிற வரையில், காங்கிரஸ், நல்ல கட்சி; நாட்டிலே பெரிய கட்சி; மக்கள் ஆதரிக்கவேண்டிய கட்சி;—என்றெல்லாம் கதை கதையாகக் கூறுவதும், அதே கட்சி இவருக்கு இடமளிக்க மறுத்து, வேறு ஒருவருக்கு பதவி தருகிறது என்றால், உடனே, 'அந்தக் கட்சி கெட்டுப்போய்விட்டது,' என்று கூசாமல் கூறுவதும், எவ்விதமான பண்பு என்று கருதுகிறீர்கள்?

'தனக்குப் பயன்படாதது, உடைபட வேண்டும்; ஒழிந்து போக வேண்டும்' என்ற 'கிராதக' எண்ணமென்றுதானே இதற்குப் பொருள்!

காங்கிரஸ் கட்சி கெட்டு விட்டது—என்று, ஆச்சாரியார் பேசுவார் என்று யார் எதிர்பார்த்திருக்க முடியும்?

இருமுறை முதலமைச்சர் பதவியும், ஒருமுறை கவர்னர் பதவியும், ஒருமுறை கவர்னர்-ஜெனரல் பதவியும் பெற்றபோது காங்கிரஸ், இவருக்கு நல்ல கட்சியாக இருந்தது; இப்போது கெட்ட கட்சியாகி விட்டது! எப்படி இருக்கிறது, நியாயம்!!

காங்கிரஸ் கட்சி கெட்டுக்கொண்டே வருகிறது என்பதைக் கண்டு, கசிந்து கண்ணீர் மல்கி, 'ஐயகோ! என் அருமைக் கட்சி இக்கதிக்கு ஆளாகிவிட்டதே! என் செய்வேன்!' என்று புலம்பி, மகேசனிடம் முறையிட்டு, காங்கிரஸ் கட்சியைத் திருத்த முயற்சித்து, எவ்வளவு அரும்பாடுபட்டும் அக்கட்சியைத் திருத்தவே முடியாமற்போகவே, 'இனி இக்கட்சியிலே இருத்தல் ஆகாது' என்று முடிவு செய்து, காங்கிரசை விட்டு வெளியேறினவரா, இந்த ஆச்சாரியார்?

இல்லை, இல்லை!!

தனக்குப் பதவி தரும் சாதனமாக இருந்தவரையிலே, காங்கிரஸ் சிறந்த கட்சி என்று வாழ்த்தினர்; பதவி பறிபோனதும், காங்கிரஸ் கட்சி மோசமாகிவிட்டது என்று வசைமொழி பாடுகிறார்!

தூயவர் என்கிறார்கள்; வாய்மையாளர் என்கிறார்கள்—அதி பாதகர்கள்! அவருடைய மனப்பான்மையோ, சராசரி அளவு நாணயத்தையும், நேர்மையையும் கொண்டவர்களைக்கூட திடுக்கிட வைக்கிறது!

காரணமும் காட்டுகிறார்; வக்கீலல்லவா!

**காங்கிரஸ் கட்சி கண்டவர்களையும் சேர்த்துக் கொண்டதாம்; அதனால் கெட்டுப்போய் விட்டதாம்!!**

பாமரருக்கும் புரிய வேண்டும் என்பதற்காக, எளிய உதாரணமும் தருகிறார்.

உடல் கனத்துப்போனால், ஊதல் சரீரமானால், பலம் கிடையாதல்லவா? அதுபோல, கண்ட கண்டவர்கள் காங்கிரசில் சேர்ந்துவிட்டார்கள்; அதனால் கட்சி 'பெருத்து'ப்போய்விட்டது; பெருத்து விட்டதால், பலம் குன்றிப்போய்விட்டது—என்கிறார்!

ஆனால், இந்தப்பேருண்மை, இந்தப் பெருந்தகையாளருக்கு, எப்போது தெரிந்தது? அதுதான் சுவாரஸ்யமான அம்சம்!

பதவியில், இருந்த வரையில் ஆச்சாரியார் இந்தக் கீதோபதேசம் செய்யவில்லை! பதவியும் போயிற்று! இந்த பகவத்கீதா பிரசங்கமும் ஆரம்பமாகிறது!

காங்கிரசிலே, கண்ட கண்ட பேர்வழிகளெல்லாம் சேர்ந்தார்களே—அது எப்போது? இவர் ஆட்சியை விட்டு விலகிய பிறகா? இல்லை! நெடுநாட்களாக இது நடைபெற்று வருகிறது!

ஆச்சாரியார் ஆட்சி காலத்திலே இது அமோகமாக நடைபெற்றது! அவரே இந்தக் கைங்கரியத்தைச் செய்தும் வந்தார்!

மாணிக்கவேலரை மந்திரியாக்கியவர், இந்த மகான் தானே!

எதிர்ப்பட்டோரிடமெல்லாம் இனிக்க இனிக்கப் பேசி, இனித்தவர்களை எல்லாம் காங்கிரசிலே சேர்ந்துகொள்ளச் செய்தவர் இவர்தானே!!

அப்போதெல்லாம் இந்தப் பேருண்மை இந்தப் பெருமானுக்குத் தோன்றவில்லை! இப்போது பதவி இல்லை—உடனே, உண்மை பளிச்சென்றுத் தெரிகிறது; ஊராருக்கு அதை உரைத்திட வேண்டுமென்று துடிக்கிறது—பேசுகிறார்!!

"முன்பெல்லாம், 'கஷ்டநஷ்டம்' ஏற்கக்கூடியவர்கள், அஞ்சா நெஞ்சுடைத்தவர்கள், தியாகிகள் இவர்கள் மட்டுமே காங்கிரசில் இருக்க முடிந்தது; இப்போது யார் யாரோ சேருகிறார்கள்; சேர்ந்ததால், காங்கிரஸ் கட்சி பருத்துவிட்டது; அதனாலே அதன் பலனும் பாழ்பட்டுவிட்டது" என்று கூறுகிறார் ஆச்சாரியார்!

காங்கிரஸ் கட்சி அடைந்துள்ள நிலைமை இதுதான்; உண்மை — முற்றிலும் உண்மை; இதை எதிர்பார்த்தோ என்னவோ, காந்தியார், 'சுயராஜ்யம் கிடைத்ததும் காங்கிரசைக் கலைத்துவிட வேண்டும்,' என்று கூறினார்; நாம் இவைகளை மறுப்பவர் அல்ல; மாறாக, இவைகளைப் பன்முறை நாட்டு மக்களுக்கு எடுத்துக் கூறியுள்ளோம்.

நாம் கேட்பது, பதவி கிடைத்த வரையில், இதை மூடி வைத்துக்கொண்டிருந்த இந்த முதியவர், பதவி இழந்ததும், இதைப் பேசுகிறாரே இவருடைய நோக்கும் போக்கும் எப்படிப்பட்டது என்று கேட்கிறோம்!

உண்மையிலேயே இவருக்கு நாட்டவரிடமும், நாட்டவரை ஆட்டிப் படைக்கும் அதிகாரத்தைப் பெற்ற காங்கிரஸ் கட்சியிடமும் அக்கறை இருந்திருக்குமானால், 'காங்கிரஸ் கட்சி கெட்டுவிட்டது,' என்பதை எடுத்துச் சொல்லி, திருத்த முற்பட்டு, முடியாமற்போயிருந்தால் வெளியேறி, மக்களிடம் உண்மையைப் பேசி இருக்க வேண்டாமா? செய்தாரா! பதவி, அவரைப் பேசவிடாமல் தடுத்துவிட்டதே! பதவி போன பிறகுதானே, பேசுகிறார்!!

அவருக்குப் புரியும் சமஸ்கிருத பழமொழி ஒன்று உண்டு—விருத்தநாரி பதிவ்ரதா என்பார்கள்;—கிழமானவள் கற்புக்கரசியானாள்—என்பது பொருள்; அதுபோலல்லவா இருக்கிறது, இவர் பேசும் போக்கும்! சரியா என்று கேட்கிறோம்.

"இந்தக் காலத்திலெல்லாம் 'எலக்ஷன்' வேலையைத் திறமையாகச் செய்து முடிக்கக்கூடியவனெல்லாம் தலைவனாகி விடுகிறான்!" — என்று வேறு கேலி பேசியிருக்கிறார்.

மங்க பதியினனுக்கும், ஆச்சாரியார் வீசும் கணை, யாரை நோக்கி என்பது புரியுமே!

இப்போதுதான், காமராஜர் ஜனநாயகப் பண்பாட்டின்படி தேர்தலில் ஈடுபட்டு, பட்டி தொட்டி என்று பாராமல், பகல் இரவு என்று கவனிக்காமல், சுழல் வேகத்தில் சுற்றிச் சுற்றித் தேர்தல் காரியத்தில் ஈடுபட்டு, வெற்றி பெற்றார்! வேதாந்தி பேசுகிறார், இதே சந்தர்ப்பமாகப் பார்த்து, 'தேர்தல் வேலையைத் திறமையாகப் பார்க்கிறவனெல்லாம் இந்தக் காலத்திலே தலைவன் ஆகிவிடுகிறான்,' என்று!

(1) காங்கிரஸ் கெட்டுவிட்டது;

(2) கண்டவனெல்லாம் காங்கிரசில் சேர்ந்துவிட்டான்;

(3) எவனெவனோ தலைவனாகிறான்.

மூன்று முத்துகள்—முதியவரின் பொச்சரிப்பு பெற்றெடுத்தவைகள்! இவரை, ஞானி என்கிறார்கள்; முனிவர் என்கிறார்கள்; பதவி அவருக்குத் துச்சம் என்கிறார்கள்!!

"காங்கிரசு கெட்டுவிட்டது; எவனெவனோ—அதாவது தகுதியற்றவன்—தலைவனாகிவிட்டான்; ஆகவே, காங்கிரசை இனி எதிர்த்து ஒழித்திடத்தான் வேண்டும்," என்றுதான் ஆச்சாரியார் கூறுகிறார், என்றே அவர் உரை கேட்டோர் எண்ணுவர்! அவருக்கே அது புரிகிறது—பூசநூல் வல்லவரல்லவா! எனவே, அவரே, "இப்படி எல்லாம் நான் பேசுவதால், நீங்கள் இப்போதுள்ள சர்க்காரை எதிர்க்கக் கிளம்பிவிடாதீர்கள்," என்று கூறுகிறார். இந்த சாகசம், வேறு யாருக்கு வர முடியும்!

ஆச்சாரியாருடைய மனம் வெதும்பிக் கிடக்கிறது!

தன்னைப் பதவியிலிருந்து 'ஓய்வு' எடுத்துக் கொள்ளச் செய்தவர்கள், ஒரு நொடியில் கவிழ்ந்து போவார்கள்—என்று தப்புக் கணக்கும் போட்டார்!

நிர்வாகம் நிலைகுலைந்து போகும்; எதிர்ப்புச் சூறாவளி கிளம்பும் — என்றெல்லாம், ஏதேதோ எண்ணினார்!

குடியேற்றம் தேர்தலில், 'பகவான்' கடாட்சிப்பார்—என்று நம்பினார்!

எல்லாம் பொய்த்தும் போகவே, உள்ளே மூண்டு கிடந்த பகைமையைக் கக்கியும் விட்டார்!

இடம் எது என்கிறீர்களா? மைலாப்பூர் விவேகானந்தா கல்லூரி!!

ஆச்சாரியார் பேசினார்; ஏ. எஸ். பி. ஐயர் தலைமை தாங்கினார்; கல்யாணகிருஷ்ண பாகவதரின் வீணைக் கச்சேரியும் நடைபெற்றது—ஆகஸ்ட் ஏழாம் நாள்!

இதனைக்கும் அன்றைய சொற்பொழிவில், அவர் வலியுறுத்திட எடுத்துக்கொண்ட பொருள், 'கடவுள் நம்பிக்கை' என்பதுதான்!

கடவுள் நம்பிக்கையின் அவசியத்தை வலியுறுத்தும் பேச்சோடு பேச்சாக, இந்த அரசியலையும் கக்கினார். மகிழ்ந்தனர்!!

நாடு கேட்கிறது—காங்கிரஸ் கெட்டுவிட்டது என் விட்டு வைத்தீர்; ஏன் தடுக்கவில்லை; ஏன் வெளியேறவில்லை; நாட்டு மக்களுக்கு இந்த உண்மையை ஏன் இதுவரை கூறவில்லை; ஏன் இப்படிக் கெட்டுக் கிடக்கும் காங்கிரசிடம் பதவி பல பெற்றீர்; பதவி இழந்த பிறகு இப்படிப் பேசுகிறீரே, அது ஏன்?—என்றெல்லாம்!

விருத்தநாரி பதிவ்ரதா! வேறென்ன கூற இருக்கிறது!!

## தி. மு. கழக உறுப்பினர் நால்வர் மீது வழக்கு

### தீர்ப்பு ஒத்திவைப்பு

5—8—54 அன்று காலை சென்னை பெத்தநாய்க்கன் பேட்டை தி. மு. கழகத்தோழர்கள் சி. ஆர். பாலசுந்தரம், பனபொழியன், கிருட்டிணசாமி, வானவரம்பன் ஆகியோர்கள் வழக்கு சென்னை கவுரவ மாஜிஸ்திரேட் முன்னிலையில் எடுத்துக் கொள்ளப்பட்டது. கழகத் தோழர்கள் சார்பில் தோழர் சண்முகம் விசாரிக்கப்பட்டார். தோழர் பாலசுந்தரம் அவர்களே வழக்கைப் பற்றி வாதாடினார். வழக்கின் தீர்ப்பு 12—8—54 அளிக்கப்படும்.

## கைதிகளுக்கு 'விடுமுறை'!

### மேற்கு வங்க அரசு சட்டம் இயற்றுகிறது!

நீண்ட காலச் சிறைத் தண்டனை அனுபவிக்கும் குற்றவாளிகளுக்கு ஆண்டுக்கு ஒருமாதம் 'விடுமுறை' அளிப்பதற்காக கைதிகள் சட்டத்தில் திருத்தம் ஒன்று கொண்டுவர மேற்கு வங்க அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறது.

தங்களுடைய உற்றார் உறவினருடன் தண்டனை அனுபவிக்கும் காலத்தில், கைதிகள் 'திருப்பி குற்றம் புரியும் மனப்பான்மை' குறையக் கூடும் என நிபுணர்கள் கருதுகின்றனர் என்று தெரிகிறது.

கொலை, திருட்டு, அரசாங்கம், இராணுவம் இவற்றை எதிர்த்துச் செய்யும் குற்றம் புரிந்தவர்கள் ஆகியோர் 'பரோல்' அனுமதி, விடுமுறை பெற அனுமதிக்கமாட்டார்களாம்.



# "அறப்போர் — எந்த சக்தியாலும் அடக்கப்பட முடியாதது"

## சகோதர உணர்வுக்கு உலை வைக்கிறது டெல்லி!

### நாகர்கோவிலில் முன்னணி வீரர்கள் முழக்கம்

"தரணி புகழ, தன்மானத்தோடு வாழ்ந்த தமிழர்கள் இன்று உரிமை கோரி போராட்டம் துவங்கியுள்ளனர். அவர்தம் அறப்போரை எதிர்த்து நிற்க எந்த சக்தியாலும் இயலாது என்பது திண்ணம். எதிர்ப்பவர் எவராயினும், அவர், அழிவுப் பாதையை நோக்கி நடப்பவராவர்.

"தாய்த் தமிழகத்திலிருந்து திரு—கொச்சி தமிழர் அறப்போரில் பங்கு கொள்ள அளவற்ற தோழர்கள் காத்திருக்கின்றனர்; மதுரை மாநகர் மட்டும் 1,000 தொண்டர்கள் கொண்ட அணிவகுப்பை வைத்திருக்கிறது; பொதுச் செயலாளர் அண்ணா அவர்களின் அனுமதி கிடைத்தால், களம் புக, களிப்படைவர்,"

என்று திரு—தமிழர் அறப்போரை ஆதரித்து 5—8—54 மாலை நாகர்கோவில் நகரசபைத் திடலில் நாஞ்சில் மாவட்ட தி. மு. க. செயலாளர் தோழர் வி. எம். ஜான் தலைமையில் நடைபெற்ற ஒரு மாபெரும் பொதுக்கூட்டத்தில், மதுரை தோழர் என். முத்து அவர்கள் முழங்கினார்.

★

"அண்ணன் தம்பி போன்று ஒற்றுமையாக வாழ வேண்டிய தமிழர் - மலையாளிகளிடையே வீணான பகைமையையும், பூசல்களையும் கிளப்பிவிட்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறது பண்டித நேருவின் டில்லி ஆட்சிபீடம்! பண்டைக் காலத்தில் தமிழர்கள் ஒற்றுமையுடனும் பண்புடனும் வாழ்ந்ததாகவே பழம் பெரும் வரலாற்றுச் சுவடிகள் பறைசாற்றுகின்றன! சேர, சோழ, பாண்டிய நாட்டு மன்னர்களும், மக்களும் ஒற்றுமையுடன்தான் வாழ்ந்து வந்திருக்கின்றனர். ஒருவருக்கொருவரிடையே சண்டையிட்டுக் கொண்டாலும், தாய்மொழி தமிழுக்கு ஆபத்தென்றால், தமிழனின் மானத்திற்கு கேடுவருகிற தென்றால், மூவேந்தரும் ஒன்று சேர்ந்து, பகைமையை மறந்து பகைவனை ஒழித்துக் கட்டியிருக்கிறார்கள் என்றே சரித்திரம் சொல்லுகிறது. அந்த இன ஒற்றுமை உணர்வு நமக்கு இன்று இன்றியமையாததாகும்,"

என்று, அதே கூட்டத்தில் பேசிய தோழர் இரா. இளவழுதி அவர்களும் குறிப்பிட்டார்.

மேலும் அவர்கள் இருவரும், திரு-கொச்சி, தமிழர் அறப்போரில் தி. மு. கழகத்தின் கண்ணோட்டம் குறித்தும், இன்றைய நிலையில் திரு-தமிழர் அறப்போரில் தி. மு. கழகம் ஏன் பங்கு கொள்கிறது என்பது பற்றியும் விளக்கி விரிவுரை ஆற்றினர். கொட்டும் மழையையும் பொருட்படுத்தாது ஆயிரக்கணக்கான மக்கள் கூடியிருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## அடையாள மறியலில் கலந்து கொண்ட தோழர்கள் பட்டியல்

நாகர்கோவில் அடையாள மறியலில் கலந்துகொண்டு போலீசாரால் கைது செய்யப்பட்ட மற்ற தி. மு. கழகத் தோழர்களின் பட்டியல் பின்வருமாறு :-

இவர்களது வழக்கு, தண்டனை பற்றிய விபரங்கள் பின்னர்தான் தெரியும்.

**மூன்றாவது படை**

வை. கிருட்டிணன் (தலைவர்)
அ. சு. வேலாயுதம், சி. அழகப்பன், கே. ஜெகநாதன், ஏ. கணேசன், ஆர். சுப்பையன், என். நாராயணர், என். மாடசாமி, என். நாராயணன், ஆர். அனந்தபெருமாள்.

**நான்காவது படை**

டி. சி. குற்றாலம் (தலைவர்)
ஏ. முத்தையா, மு. சுந்தரன், ஓ. மாணிக்கம், க. சந்தோஷம், எஸ். செல்லப்பா, பி. சுவாமிதாஸ், எஸ். மாசிலாமணி, எம். பி. பத்மநாபன், ஈ. ராமசுப்பு.

**ஐந்தாவது படை**

டி. பூதலிங்கம் (தலைவர்)
ஜி. மகாராஜன், எம். செல்லப்பன், எம். ஏ. மன்னான், ஏ. ராஜகோபால், ஆர். எஸ். சுப்பிரமணியம், ஏ. துரைசாமி, பி. நடராசன், கே. காளிதாஸ், பி. செல்லத்துரை.

**ஆறாவது படை**

ஆர். அருணாசலம் (தலைவர்)
என். ஆறுமுகம், என். சண்முகசுந்தரம், ஈ. தாணுமலையன், ஆர். சிதம்பரம், வி. எஸ். ரத்தினம், டி. மாடசாமி, என். விவேகானந்தன், என். சுப்ரமணியன், என். சண்முகம்.

**ஏழாவது படை**

ஏ. செல்லப்பன் (தலைவர்)
ஐ. ஜேசுதாஸ், ஜே. ஞானசு, எம். தெய்வசிகாமணி, கே. ராஜமணி, பி. செல்லையா, பி. ஆறுமுகம், ஏ. சண்முகம், எ. நீலகண்டன், சி. குமரேசன்.

**எட்டாவது படை**

எஸ். சுந்தரம் (தலைவர்)
வி. பாலசுப்பிரமணியம், சி. ஜே. தம்பி, பி. டி. செல்லத்துரை, எஸ். ஐ. வில்பிரட், எச். வி. கிறிஸ்டாபர், வி. ராஜா, என். ரெங்கசாமி, ஏ. எம். ரவீந்திரன்.

★

## செங்கோட்டையில்

செங்கோட்டை அறப்போரில் கலந்துகொண்ட தோழர்களின் பிரிவு விபரம் :

**முதல் பிரிவு :**
தி. மு. கனியா, காதர் முகைதீன், வி. சுப்பையா, சிவசுப்பிரமணியன், ரசாக்.

**இரண்டாம் பிரிவு :**
என். கே. முத்து, கே. கணபதி, பி. சுப்பையா, அப்துல் ரஹமான், வி. ராமசாமி, சுப்பாணி

**மூன்றாம் பிரிவு :**
மாணிக்கம், குட்டிபாண்டியன், அந்தோணிச்சாமி, அருணாசலம், செல்லையா, வேலு, கொத்தாளம்.

**நான்காம் பிரிவு :**
இரா. பாண்டியன், சண்முகவேல்.

**ஐந்தாவது பிரிவு :**
சிவனு, பண்டாரம், டி. கே. பாண்டியன்.

**ஆறாவது பிரிவு :**
ஆ. திராவிடமணி, ராமசாமி, பே. அழகு, திருமலை, சுப்பையா, கிருட்டிணசாமி, குட்டி, வீரச்சாமி.

## திரு - தமிழர் அறப்போர்

| | |
|---|---|
| கைதான தி. மு. கழகத் தோழர்கள் | 110 |
| இதுவரை தண்டிக்கப் பட்டோர் | 23 |

## இந்திய சட்ட மன்ற சரித்திரம் காணாத புதுமை!

### 'சபாநாயகர் மீது நம்பிக்கையில்லை!'

### பதவியை விட்டு விலகக் கோரிக்கை!

ராஜஸ்தான் மாநில சட்டசபை சபாநாயகர் நரோட்டமலால் ஜோஷி என்பவர் மீது நம்பிக்கை இல்லை என்று கூறி, அவர் தனது பதவியை உடனே ராஜிநாமாச் செய்ய வேண்டுமெனக் கோரும் கடிதம் ஒன்றை ராஜஸ்தான் சட்டசபை காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த 66 அங்கத்தினர்கள் கையொப்பமிட்டு, கட்சித் தலைவரிடம் தந்துள்ளனராம்.

அங்கு சட்டசபைக் காங்கிரஸ் அங்கத்தினர்களின் எண்ணிக்கை 10 மந்திரிகள் உட்பட 91 ஆகும். இந்தக் கடிதத்தில் சில மந்திரிகளும் கையொப்பமிட்டிருக்கின்றனராம்.

சபாநாயகர், காங்கிரஸ் கட்சியின் நடவடிக்கைகளில் பலமுறை தலையிட்டதாகக் குற்றம் சாட்டப்படுகிறார். சமீபத்தில், அவர் ஒரு மாவட்ட காங்கிரஸ் செயற்குழு உறுப்பினர் ஒருவர் மீது நம்பிக்கை இல்லாத் தீர்மானம் ஒன்றைக் கொண்டுவருவதற்கு முக்கிய காரணமாயிருந்ததாகவும் சொல்லப்படுகிறது. எனவே, சபாநாயகர் அங்கத்தினர்களின் நம்பிக்கையை இழந்துவிட்டார் என்றும், அதனால் அவர் தமது பதவியை உடன் ராஜிநாமாச் செய்ய வேண்டுமெனவும் கோரப்படுகிறதாம்!

## கொழும்பு அரசுகள் மாநாடு

### கலந்துகொள்ள பண்டித நேரு மறுப்பு

புதுடில்லி, ஆக. 8— 'சீட்டோ' பற்றிப் பேச கொழும்பு அரசுகள் மாநாட்டை இலங்கையில், செப்டம்பர் திங்களில் கூட்ட வேண்டுமென்ற இலங்கைப் பிரதமர் கொத்தலாவலையின் யோசனையை நேரு நிராகரிக்கிறார் என்று தெரிகிறது.

மேற்படி மாநாட்டில் கலந்துகொள்ள இயலாது என்று பண்டித நேரு அறிவித்திருக்கிறார்.

'சீட்டோ' பற்றி கொழும்பு அரசுகள் தங்கள் கருத்துக்களை வெளிப்படையாக ஏற்கனவே தெரிவித்து விட்டன என்றும், ஆகவே தனியாக மாநாடு ஒன்று அவசியம் இல்லை என்றும் அவர் கருதுகிறார்.

# கவர்னர் சம்பளப் பிரச்னை: கண்ணியர்கள் கருத்துரை

கவர்னருக்கு இப்போது தரப்படும் இலட்சக்கணக்கான ரூபாய் சம்பளம் சரிதானா? அதைக் குறைக்கப் போராட்டம் நடத்த வேண்டுமென்று தி. மு. கழகப் பொதுச் செயலாளர் கூறியது தவறா? என்பது பற்றி வாசகர்களை 'கருத்துரை அளியுங்கள்' என்று கேட்டிருந்தோம். கருத்துரைகள் கொண்ட கடிதங்கள் குவிந்த வண்ணமுள்ளன! அவைகளில் சில முன்னர் வெளியிட்டிருந்தோம். தொடர்ந்து இன்றும் வெளியிடுகிறோம்!

ஐயா,

உத்தமர் காந்தியார் தன்னுடைய வாழ்க்கையில் அரை நிர்வாண உடையுடன் எப்படி எளிய வாழ்க்கை வாழ்ந்து வந்தாரோ, அதுபோலவே இந்நாட்டில் வாழும், ஆள்பவர்கள்—ஆளப்படுபவர்கள்; ஆக இரு பிரிவினரும் நன்முறையில் வாழ வேண்டும் என்று ஆசைப்பட்டார்; அதற்காகவே தன் வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணித்தார்; தனதுடைய எண்ணங்களை மக்களுக்கு செயலில் காட்டுவோர் என்று கருதியே தனக்கு வாரிசாக நேருவை ஏற்றார்; அந்த நேருவின் போக்கு, காந்தியாருடைய எண்ணங்களை கல்லறைக்கு அனுப்பிவிட்டது; காந்தியார் எண்ணங்களை நாட்டில் செயல்படவைக்க கிளர்ச்சியின் மூலந்தான் இயலும். ஆகவே, நமது சென்னை மாகாண கவர்னருடைய சம்பளத்தைக் குறைக்க, அறப்போர் அவசியமானதுமட்டுமல்ல, அவசரமானதுங்கூட!

எஸ். என். அற்புதசாமி,
குளூர்.

★

ஐயா,

சோர்வடையாமல் வேலை செய்தும் சோற்றுக்கு வழியின்றித் திண்டாடித் திரியும் திக்கற்றவர்களைக் கொண்ட இத் திருநாட்டில், தனிப்பட்ட ஒருவருக்கு மாதம் ரூ. 99,300 சம்பளம் என்றால் இதைக் கேட்கும் குடிமக்களது நெஞ்சம் குமுறுமல் குதூகலமடையவா செய்யும்?

போராட்டம் நடைபெற்றால், என்னைப் போன்ற மாணவர்களது சேவை தேவையென்றால், நானும் எனது மற்ற மாணவத் தோழர்களும் கல்லூரிப் படிப்பைக் கைவிட்டு விட்டுக் கலந்து கொள்ளத் தயார் என்பதைக் களிப்புடன் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

பி. டி. செல்வன்,
புதுக்கோட்டை.

★

ஐயா,

தந்திரம் தாண்டவமாடும் இந்நாட்டிலே, 'கவர்னர்' எனும் பெயரால் ஆண்டுதோறும் கொட்டித்தட்ட பத்து லட்சம் ரூபாயைக் கொட்டியழுவது வீணானதும், வேண்டாததுமாகும் என்பதே இந்நாட்டு நலனில் கவலை கொண்டோரின் கருத்தாகும். எனவே, அதனைக் குறைக்க நடவடிக்கை எடுப்பது — அதிலும், மக்கள் மத்தியில் மகத்தான செல்வாக்கு பெற்றியங்கும் தி. மு. கழகம் முன் வருவது பெரிதும் பாராட்டக்குரியதும், வரவேற்கத்தக்கதுமாகும்.

கவர்னர் சம்பளம் மிக மிக அதிகம்; அத்தகைய ஒரு நியமனமே தேவையில்லை என்பதே எனது கருத்து.

த. மு. பொற்கோ,
பம்பாய்.

★

ஐயா,

வடநாட்டார் நம்மை சுரண்டுகிறார்கள் என்கிறோம் நாம்; இல்லையென்றால், கவர்னர் சம்பளத்தைக் குறைத்துக் காட்டுங்களேன்? முடியாது என்றால் சுரண்டுகிறார்கள் என்பதுதானே பொருள்? இந்தக் கொடுமையை எதிர்த்து நிச்சயம் போராட வேண்டும்.

மு. பாண்டியன்
அக்கூர்—வெள்ளூர்.

ஐயா,

வந்தவரை எல்லாம் வாழவைத்து வாழ்ந்த தமிழ் நாட்டில், இன்று அரை வயிற்றுக் கஞ்சிக்கும் தாளம் போடும் இந்த நேரத்திலே, கொடுத்த நாளிலே கையெழுத்துப் போடும் கவர்னர் பிரகாசாவுக்கு ஆண்டொன்றுக்கு ரூ 10 லட்சம் சம்பளம் கொட்டிக் கொடுக்கத்தானா, திருப்பூர் குமரனை பலி கொடுத்தோம்? பாராளுமன்றம் கவர்னரின் சம்பளத்தைக் குறைத்துக் கொள்ளும் என நம்புகிறேன்; இன்றேல் கண்ணியமான முறையில் அறப்போர் நடத்தி திராவிடத்தின் தன்மானத்தைக் காப்பதே நமது கடமை!

வி. அம்சா,
பாலக்காடு.

★

ஐயா,

நாள்தோறும், நாட்டிலே, செல்வாளர்கள், பேதமை வளர் வலம் நடத்துகின்றனர். பசியால் வாடி வாழ்வின் பசை பிழிந்து, ஒப்பற்ற சுகமிழந்து விழும் உயிர்களைப் பார்த்துக்கொண்டே உல்லாசமாய் மோட்டாரில் பவனி வருகின்றனர் ஆளவந்தார்கள்! பேதமையின் நிழல் தெரியாமல், செழிப்பான வாழ்க்கையில், சிந்துகளும் அவர்கட்கு இந்தக் கொடுமைகள் தென்படவில்லை! அவர்களைப் பற்றி நினைக்கக் கூட நேரமில்லை!

மாநிலத்தின் தலைவராம், மக்களைப் பற்றிக் கவலை படாமல் சொகுசுச் சோலையிலே சுற்றித் திரியும் கவர்னருக்குப் பத்து லட்சம்! பொதுப் பணத்தை ஆண்டு ஒன்றுக்குத் தந்து பாழ்படுத்துகிறார்களே! அடுக்குமா இது?

[illegible] காலம் நாட்டிலே, "நாட்டின் நிலையும் கவர்னர் சம்பளமும்" என்பது பற்றி விளக்கம் தந்து, தீர்மானங்கள் கவர்னருக்கும், மத்திய அரசாங்கத்திற்கும் தெரிவிக்க வேண்டும். சட்டத்தை நீட்டினால் மக்கள் சக்தி திரண்டெழும்.

ஆதன்,
சென்னை.

★

ஐயா,

இன்று நமது மாநில கவர்னராகப் பணி புரிபவர் உத்தமர் காந்தியாரின் கொள்கைகளில் பெருநம்பிக்கை கொண்டவர்தான்; இருந்தாலும், காந்தியாரின் எளிய வாழ்க்கையை ஓரளவுகூட பின்பற்றுபவராகக் கருத தக்கில்லாத நிலையிலேதான் உள்ளார். காரணம் ஆண்டு ஒன்றுக்கு சுமார் 10 லட்சம் சம்பளமாகப் பெறுகிறார்.

அந்நியர் காலம், போலி மந்திரி சபைகளை அமைப்பதற்கும், விரும்பாவிட்டால், தன் இஷ்டம் போல் சர்வாதிகார ஆட்சி செலுத்தவும் ஏற்படுத்தப்பட்ட இந்த கவர்னர் பதவி முன்னர் தேவையாக இருந்தது. இன்று, நாடு விடுதலை அடைந்து மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அமைச்சர்களால் ஆட்சி புரியும் இந்த காலத்தில், கவர்னர் ஓர் பொது பொம்மை போன்றவர். இவரால் மக்களுக்கு எவ்வித பலனும் கிடையாது. எனவே இந்த வெறும் போலி பதவிக்கு 10 லட்சம் தேவையற்ற ஒரு நடவடிக்கையாம் என்றால், அதை நாட்டு மக்களின் நல்வாழ்வில் அக்கறை கொண்ட எவரும் கண்டித்தே தீருவர்.

கே. என். தணிகாசலம்,
[illegible]

திரு—கொச்சிக்கு நேரு வந்தபோது:

# தி. மு. கழகத் தோழர்கள் கைதுசெய்யப்பட்டதேன்?

— (:) —

## கருப்புக் கொடி காட்டுவார்கள் என்ற அச்சமாம்!

சட்டசபையில் ஏ. கோவிந்தசாமியின் கேள்வி!

சென்னை, ஆக. 7—

"இந்தியப் பிரதம மந்திரி பண்டித நேரு திரு-கொச்சிக்குச் சென்றபோது கொல்லங்கோடு தி. மு. கழகத்தைச் சார்ந்த நான்கு தோழர்களை அரசாங்கம் கைது செய்தது ஏன்?" என்று தோழர் ஏ. கோவிந்தசாமி எம். எல். ஏ. அவர்கள் கேட்ட கேள்விக்குப் பதிலளிக்கையில், நிதி அமைச்சர் சுப்ரமணியம், "கடந்த பிப்ரவரி 4-ந் தேதி யன்று பண்டித நேரு திரு-கொச்சிக்கு வருகை தந்தபோது, அவருக்கு எதிராகக் கருப்புக் கொடி காட்ட முயற்சிப்பார்கள் என்ற யூகத்திலேயே கொல்லங்கோடு தி. மு. கழக தோழர்களைப் போலீசார் கைது செய்தனர்," என்று கூறினர்.

கைது செய்யப்பட்ட நால்வரும் அன்றைய தினமே விடுதலை செய்யப்பட்டனர் எனத் தெரிகிறது.

ஏ. கோவிந்தசாமி:—நேருவுக்கு எதிராகக் கருப்புக் கொடி காட்டுவது என்று எந்தவிதமான முடிவும் இல்லாதபோது அவர்களை ஏன் கைது செய்தீர்கள்?

மந்திரி:— போலீசாருக்கு தகவல் கிடைத்திருக்கக் கூடும்.

ராமமூர்த்தி:—அந்த நால்வரையும் கைது செய்ய சர்க்கார் உத்தரவிட்டதா?

மந்திரி:—சர்க்கார் உத்தரவிடவில்லை. போலீசாரே நடவடிக்கை எடுத்திருக்கலாம்.

ஏ. கோவிந்தசாமி:— தோழர்கள் கைது செய்யப்பட்டது மத்திய அரசாங்க உத்தரவின் பேரிலா? அல்லது சென்னை அரசாங்க உத்தரவின் பேரிலா?

மந்திரி:—இந்த அரசாங்கம் கைது செய்யுமாறு உத்தரவு எதும் பிறப்பிக்கவில்லை.

## காஷ்மீர் பிரச்னை

பாக். சர்க்கார் ஐ. நா.—வுக்குச் செல்கிறது

ஏழாண்டுகளாக தீராது நிற்கும் காஷ்மீர் பிரச்னையை மீண்டும் ஐ. நா. பாதுகாப்பு சபைக்குக் கொண்டு செல்ல பாகிஸ்தான் முடிவு செய்துள்ளது.

மெக்கா சென்றுள்ள பாக் பிரதமர் கராச்சி திரும்பியதும் இறுதி முடிவு செய்யப்படுமாம். யாரை ஐ. நா. சபைக்கு அனுப்புவ தென்பதுதான் இறுதி முடிவில் தீர்மானிக்கப்பட வேண்டிய செய்தியாகும்.

## விசாரணையின்றி காவல் நீடிப்பு

பாகிஸ்தான் பஞ்சாப் அரசாங்கம், சமீபத்தில் கம்யூனிஸ்டு கட்சிக்குத் தடை விதித்தபோது கைது செய்யப்பட்ட 14 கட்சி ஊழியர்களை மேலும் மூன்று மாதத்திற்கு விசாரணையின்றி காவலில் வைத்திருக்க முடிவு செய்துள்ளதாம்.

பொதுஜனப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்ட அத்தோழர்களின் காவலை தொடர்ந்து நீடிக்க பாக் தடுப்புக்காவல் சட்டத்தை பிரயோகிக்கிறது அரசாங்கம்!

## பால்கன் ஒப்பந்தம்

கையெழுத்தாயிற்று

பெல்கிரேட், ஆக. 9—

கிரீஸ், யூகோஸ்லேவியா, துருக்கி ஆகிய மூன்று நாடுகளுக்கிடையே பால்கன் ஒப்பந்தம் கையெழுத்தாகி விட்டது என்று தெரிகிறது.

இந்த ஒப்பந்தத்தின் மூலம் ஏதாவது ஒரு நாடு தாக்கப்பட்டால் மற்ற இரு நாடுகளும் தாக்கப்பட்ட நாட்டிற்கு உதவ வேண்டுமென்று ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

துருக்கியும், கிரீசும் 'நேட்டோ'வின் உறுப்பினர்கள் என்பதும் யூகோஸ்லேவியா அதில் உறுப்பினர் இல்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

அரசியல், இராணுவ கூட்டுறவு ஒப்பந்தம் என்று இந்த ஒப்பந்தம் அழைக்கப்படுகிறது.

## நெல்லை மாவட்ட தி.மு.க. மாநாடுகள்

★

நெல்லை மாவட்ட தி. மு. கழக 2—வது மாநாடுகள் செப்டம்பர் 11, 12-ந் தேதிகளில் பாளையங்கோட்டையில் நடைபெறும்.

சமூக மாநாட்டை தோழர் எம். ஜி. ராமச்சந்திரன் துவக்கி வைப்பார்.

தோழர் கண்ணதாசன் தலைமை தாங்குவார்.

அரசியல் மாநாட்டை தோழியர் பூங்கோதை திறந்துவைப்பார்.

தோழர் ஏ. வி. பி. ஆசைத்தம்பி தலைமை தாங்குவார்.

இரு நாட்களிலும் இயக்கப் பிரசார நாடகங்களும் உண்டு.

பொதுச்செயலாளர் அண்ணாதுரை உள்ளிட்ட கழக முன்னணி வீரர்கள் அனைவரும் பங்கு பெறுவர்.

—வரவேற்புக் குழு.

## பொரளை தி. மு. கழகம்

முதலாம் ஆண்டு விழா

இலங்கை தி. மு. கழக பொரளை கிளையின் முதலாம் ஆண்டு விழா தோழர் ஆர். ஏ. மணி தலைமையில் 15—8—54 மாலை 4 மணிக்கு பொரளை ஒய். எம். பி. ஏ. மண்டபத்தில் நடைபெறும். பல தோழர்கள் சொற்பொழிவாற்றுவர்.

# திரு-தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர்கள் விடுதலை

## திருவாங்கூர்-கொச்சி அரசாங்கத்தின் உறக்கம் கலைகிறது!

திருவனந்தபுரம், ஆக. 9—

திருவாங்கூர் தமிழ் நாடு காங்கிரஸ் தலைவர்களான, நேசமணி எம். பி. அப்துல் ரசாக் எம். பி. சிதம்பரநாத (நாடார்) எம். எல். ஏ., பி. ராமசாமி (பிள்ளை) ஆகியோர் இன்றிரவு விடுதலை செய்யப்பட்டனர்.

தேவிகுளத்தில் அமுல் செய்யப்பட்டிருந்த 144 சட்டத்தை மீறியதாகக் குற்றஞ் சாட்டப்பட்டு தண்டிக்கப்பட்டிருந்தனர் இந்தத் தலைவர்களும் இன்னும் தி. த. நா. காங்கிரஸ் தோழர்களும்.

தேவிகுளத்தில் ஜூலை 27ந் தேதியுடன் 144 தடை சட்டம் ரத்தாகியது. அதிலிருந்து அங்கு அமைதியான சூழ்நிலை நிலவி வருகிறது என்று சர்க்கார் அறிக்கை ஒன்று வெளியிட்டுள்ளனர்.

திருவாங்கூர் தமிழ் நாடு தலைவர்களை விடுதலை செய்ய உத்தரவு பிறப்பித்துள்ள அரசாங்கம், தொடர்ந்து, திரு—தமிழர்கள் கிளர்ச்சியை நடத்தாது, போராட்டங்களைக் கைவிட்டு விடுவார்கள் என்று நம்புவதாகவும் தெரிவித்துள்ளது.

யார் மீதும் வழக்குத் தொடரவேண்டுமென்பது தங்கள் விருப்பமல்ல வென்றும், சட்டத்தையும் ஒழுங்கையும் நிலை நாட்ட வேண்டியது தங்கள் கடமையாயிருப்பதால்தான், சட்டத்தை மீறியவர்கள் மீது நடவடிக்கை எடுக்க நேர்ந்தது என்றும், அந்த பத்திரிகைக் குறிப்பில் கூறியுள்ளது.

## 'அமெரிக்க தலையீடு யுத்தத்தை விலைக்கு வாங்குவதாகும்!'

பார்மோசா விடுதலை பற்றி பீகிங் எச்சரிக்கை!

"சீன மக்கள், தங்களின் பிரதேச பாதுகாப்பின் நலன் கருதி, பார்மோசாவை 'விடுதலை' செய்வதில் குறுக்கிட விரும்பும் யாரும் மிக அபாயகரமான விளைவுகளை எதிர்நோக்கத் தயாராக இருக்க வேண்டும்."

"அமெரிக்க வெளிநாட்டு மந்திரி டல்லஸ், பார்மோசா விடுதலையில் குறுக்கிட தனது அரசாங்கம் தயாராக இருப்பதாக வெளிப்படையாகச் சொல்லி இருக்கிறார்."

என்று சீன செய்தி நிறுவனம் குறிப்பிட்டுள்ளது.

மேலும் அந்த நிறுவனம் கூறுவதாவது:

"கொரிய யுத்தத்தில் காட்டப்பட்ட அமெரிக்காவின் பகைமை மிகு ஆக்ரமிப்புக் கொள்கைகள் அதிகமாக ஆசியாவில் நிலவுவதற்குக் குறுக்கே நின்று வருகின்றன;

"அமெரிக்க ஆளும் வர்க்கத்தினர், ஆசியாவில் நெருக்கடியை உண்டுபண்ணும் வகையில், சீனா மீது தங்கள் பகைமை உணர்வை வளர்த்துக் கொண்டு வருகிறார்கள்."

"டல்லசும் அவரை ஒத்த எண்ணங்கொண்டவர்களும், தைவான் (பார்மோசா) பகுதியை, சீன மக்கள் விடுதலை செய்வதிலிருந்து தடுக்க யாரும் பயங்கரமான விளைவுகளைச் சந்திக்கத் தயாராக இருக்கவேண்டும் என்பதை உணர்ந்துகொள்ள வேண்டுமென எச்சரிக்கிறோம்."

# ஆந்திர தமிழ்ப் பகுதிகள் இவ்வாண்டிற்குள் கிடைக்கும்

## சென்னை நிதி அமைச்சர் கருத்து—கிளர்ச்சி தேவையில்லை என்கிறார்!

சென்னை, ஆக. 9—

சென்னை மாநிலத்திற்குரிய 'தகராறு பகுதிகள்' எல்லாம் இந்த ஆண்டிற்குள் கிடைத்துவிடும். எந்தெந்தப் பகுதிகள் சென்னையுடன் சேர வேண்டுமென்று இந்த மாநில சர்க்கார் இந்திய சர்க்காருக்கு சிபார்சு செய்யவில்லை என்றாலும், கிராம அடிப்படையில் எடுத்துக்கொண்டு, சேர்ந்தாற்போல் உள்ள தமிழர் பெரும்பான்மையாக வாழும் பகுதிகள் சென்னையைச் சேர வேண்டுமென்று கேட்டிருப்பதாகவும் சென்னை சட்டசபையில் நிதி அமைச்சர் சுப்ரமணியம் தெரிவித்தார்.

"தகராறு பிரதேசங்களில்," 1951-ம் ஆண்டு மக்கள் எண்ணிக்கைக் கணக்குப்படி கிராம, மொழிவாரி அடிப்படையில் மக்கள் எண்ணிக்கை சீட்டுக்களைப் பிரித்து எடுக்குமாறு டில்லிக்குச் சொல்லப்பட்டிருக்கிறது. இதன் முடிவுகள் தெரிந்த பிறகு எப்பகுதிகள் சென்னையுடன் சேர வேண்டுமென்பது பற்றியும், மொழிவாரியாக புதுக்கணக்கு எடுக்க வேண்டுமென்ற கோரிக்கை பற்றியும் சென்னை சர்க்கார் தனது கோரிக்கைகளை மத்திய சர்க்காருக்கு சமர்ப்பிக்குமென்று மத்திய சர்க்காருக்கு சொல்லப்பட்டிருக்கிறது" என்று அவர் மேலும் கூறினர்.

தொடர்ந்து அவர் பேசுகையில், 'இவ்விஷயத்தில் கிளர்ச்சிக்கு அவசியமே இல்லை; அரசியலின் கீழ் நாம் இப்போது செய்து வருவதன் மூலமே நமக்கு உரித்தான பகுதிகளைப் பெற்று விடலாம்," என்று குறிப்பிட்டார்.

சென்ற பிப்ரவரியில் நடைபெற்ற மாநிலப் பிரதமர்கள் மாநாட்டின் முடிவுகள் பற்றி சென்னை சர்க்கார் அனுப்பியிருந்த கடிதத்திற்கு டில்லியிலிருந்து பதில் வந்து விட்டதாகக் கூறினர்.

"பிரச்னையில், சீக்கிரம் முடிவிற்கு வர சௌகரியமாய் சென்னை, ஆந்திர, மைசூர் அரசுகள் விரும்பினால் ஒரு மாநாட்டிற்கு ஏற்பாடு செய்வதாய் டில்லி கூறியிருக்கிறது," என்று நிதி அமைச்சர் கூறினர்.

திருப்பதி பற்றி, சென்னை சர்க்கார் அக்கறை டில்லிக்கு எடுத்துச் சொல்ல வேண்டுமென்பது பற்றி வற்புறுத்திய போது, நிதி அமைச்சர், 'திருப்பதி மக்கள் தொகையைப் பொறுத்தமட்டில் நமக்குக் கட்சியே கிடையாது,' என்று பதில் அளித்தார்.

கோதண்டராமபேட்டையில் உள்ள தமிழ் ஆசிரியர் பயிற்சிப் பள்ளியை ஆந்திர சர்க்கார் மூடிவிட்டது பற்றி கேட்டபோது, "நாம் ஆத்திரப்படுவதால் ஏதும் ஆகாது; இவ்விஷயத்தில் ஆந்திர சர்க்காரை கேட்கத் தயார்; ஆனால் பலன் விசேஷமாகத் தெரிந்ததே! வீணாக யாரும் கவலைப்பட வேண்டாம்! நமக்குச் சேரவேண்டிய பகுதிகள் அனைத்தும் இவ்வாண்டிற்குள் கிடைத்துவிடும்," என்றார் நிதி அமைச்சர்.

## திபேத் வெள்ளம்

2,000 பேர் மரணம்?

காலிம்பாங், ஆக. 9—

கியான்ட்சியில் ஏற்பட்ட வெள்ளத்தால் ஏராளமான வீடுகள் நாசமடைந்தன என்றும், வீடுகளைத் தாங்கள் அனைவரும் மக்கள் அழிந்து அதிகமாகப் பொழியும் பெருமழையால் அதிகமான துன்புற்றனர் என்றும் தெரிகிறது.

இந்த வெள்ளத்தால் மாண்டவர்களின் தொகை நிச்சயமாகத் தெரியவில்லை என்றாலும், 2,000 பேர் மாண்டிருப்பார்கள் என்று நம்பப்படுகிறது.

## மொராக்கோவில் உள்நாட்டுப் போர் ஏற்படும்

ரபாட், ஆக. 9—

மொராக்கோவில் அரசியல், மதத் துறைகளில் நிலவுகின்ற நெருக்கடி முற்றி உள்நாட்டுப் போர் ஏற்படுமென்று தெரிகிறது.

மொராக்கோ சுல்தானை திரும்ப அழைக்க வேண்டுமென்ற கோரிக்கை வலுப்பெறுகிறது.

பெஸ் என்னும் நகரில் ஏராளமான மக்கள் வந்து சேர்ந்துள்ளனர்.

ஆப்ரகாம் திருவிழாவின் நாளும், மொராக்கோ சுல்தான் நாடு கடத்தப்பட்ட நாளும் ஒன்றாக உள்ளது. தேசியக் கட்சியினர் இத்திருநாளைக் கொண்டாட வேண்டாமென்று அரேபியர்களுக்கு வேண்டுகோள் விடுத்துள்ளனர்.

இத்திருவிழாவை ஒட்டி அடுத்த 24 மணி நேரத்திற்குள் பிரெஞ்சு மொராக்கோவில் உள்நாட்டுப் போர் ஏற்படுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

## இளைஞர் பகுத்தறிவுமன்ற 2-வது ஆண்டு விழா

1—8—54 மாலை 6½ மணிக்கு மதுரை கோரிப்பாளையம் இளைஞர் பகுத்தறிவு மன்ற இரண்டாவது ஆண்டு விழா, தோழர் என். வி. ஜோதி தலைமையில் தமுக்கம் திடலில் நடைபெற்றது. முற்போக்கு குழுவினர் இசையுடன் நடைபெற்றது. தோழர் இரா. சு. தங்கப்பழம் இன்றைய கம்யூனிஸ்டுகளின் போக்கு பற்றியும், திருவாங்கூர் தமிழக பிரச்னை பற்றியும் விரிவுரை யாற்றினர். மற்றும் தோழர்கள் அய்யாசாமி, மதுகரா, இராமன் முதலியோர் பேசினர். தோழர் பாண்டியன் ஆண்டறிக்கை வாசித்தார்.

மக்களாட்சி, மனிதனுப் பிறந்தவன் ஒவ்வொருவனும் தன் ஆற்றலைப் பயன்படுத்தச் செய்கிறது; ஆதலால் நான் மக்களாட்சியில் நம்பிக்கை பூண்டுள்ளேன்.

—வுட்ரோ வில்சன்

நிர்வாக ஆசிரியர் கழகத் தொண்டர் தோழர் இரா. செழியன், எம். ஏ., அவர்களால், அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று (94, குச்சி நாராயண செட்டித் தெரு, இராயபுரம்) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: சி. என். அண்ணாதுரை எம். ஏ.

